யாலே த்ருஷ்டத்துக்காக பஜிக்கிறுள் காணும். ஸதா பச்யந்தியிறே அங்கும். 'வழிப் போக்கில் கண்ணெச்சில் வாராதொழியவேணும்' என்றிறே மங்களாசாஸநம் பண்ணுகிறது. அது தன்னடையே வருமிறே மேல் வரும் பலத்தை அபேக்ஷிக்கவே. ஸாவித்ரி தன் பர்த்தாவைக் காட்டி 'இவனுக்கு நான் அநேகம் பிள்ளைகளைப் பெற வேணும்' என்று வேண்டிக்கொண்டாளிறே.

१७. यश्च रामं न पश्येत्तु यं च रामो न पश्यति ।
निन्दितः स वसेल्लोके स्वात्माऽप्येनं विगर्हते ॥

யச்ச ராமம் ந பச்யேத்து யம் ச ராமோ ந பச்யதி,
நிந்திதஃ ஸ வஸேல்லோகே ஸ்வாத்மாப்யேநம் விகர்ஹதே. 17-14. 17

விசேஷமுள்ளவனானாலும் யாவனொருவன் ராமனையும் பார்க்கிறதில்லையோ; ராமனும் எவனொருவனைப் பார்க்கிறதில்லையோ; அவன் உலகத்தில் நிந்திக்கப்பட்டவனாய் வஸிக்கவேண்டும். தன்மனதும் இந்த மனிதனை நிந்திக்கிறது.

பெ—வ்யா. (பெரிய திருமொழி, 1-1-1) [யச்ச ராமம் ந பச்யேத்து]—'ராமம்' என்கிறது கண்ணுக்கு வகுத்த விஷயத்தை. [யஃ]—காணுதிருக்கிறுன் யாவனொருவன். [து]—எத்தனையேனும் உயர்ந்தவனாகவுமாம். இது தப்பினாலும், தப்பாதது தப்பினால் வருமது இவ்வளவன்று என்கைக்காக விசேஷிக்கிறது—[யச ராமோ நபச்யதி]—எத்தனையேனும் சிறியாரும் இவர் கண்பார்வைக்கு இலக்காகாதாரில்லை. [யம்]—எத்தனையேனும் சிறியவனென்கிறது. எத்தனையேனும் சிறியாரிறே இவர் கண்ணிற் பார்வைக்கு இலக்காவார். 'யாருமோர் நிலைமையனென வறிவரிய வெம்பெருமான் யாருமோர் நிலைமையனென வறிவெளிய வெம்பெருமான்.' ப்ரஹ்மாதிகளுடைய ஞானத்துக்கும் அவிஷயமாயிருக்கும்: ஓரிடைச்சிக்கும் வேடனுக்கும் கைபுகுந்திருக்கும். எத்தனையேனும் உயர்ந்தவனாகிலும் பெருமாளுடைய ஒருநாளைப் புறப்பாடு காணுனகில், அவன் பெரியவனல்லன். எத்தனையேனும் சிறியனானவன் பக்கலிலும் தப்பாது அவருடைய பார்வை. தப்புகிறுன் யாவனொருவன், அவன் அவஸ்துக்களோடும் எண்ணப்படான். எண்ணப்படாமையிலே எண்ணப்படும். எல்லாரும் நிந்தித்து 'சீ, சீ' என்னப்படும். இவனை நிந்திப்பார் வஸிஷ்டாதிகள் தொடக்கமான நால்வரிருவரோ வென்னில்—[நிந்திதஃ ஸ வஸேல்லோகே.] லோகே நிந்திதஃ—இவனை நிந்திக்கைக்குரியரல்லாதாரில்லை. விஷயப்ரவணனானவன் இப்போது பழியாய் மேல் நரகமாயிருக்கச்செய்தே, தான் 'நல்லது செய்கிறேம்' என்றிருக்குமிறே, அப்படி தான் 'நல்லது செய்கிறேம்' என்றிருக்குமோவென்னில்—[ஸ்வாத்மாப்யேநம் விகர்ஹதே]—தானும் தன்னை நிந்தித்துக்கொள்ளும். திருக்கைத்தலம் இழந்தவன் 'இற்றைப் புறப்பாடு காணப் பெறுத நாம் கர்ப்பூரமும் எலுமிச்சங்காயும் பெற்றேமாகில் முடிந்து பிழைக்கலாயிற்று' என்றிருக்குமிறே.

१८. न नूनं मयि कैकेयि! किंचिदाशंससे गुणम् ।
यद्राजानमवोचस्त्वं ममेश्वरतरा सती ॥

நநூநம் மயி கைகேயி! கிஞ்சிதாசம்ஸஸே குணம்,
யத்ராஜாநமவோசஸ்த்வம் மமேச்வரதராஸதீ. 19-21. 18

ஓ கைகேயி! என்னிடத்தில் குணத்தை கொஞ்சம்கூட (நீர்) அறியவில்லை. (இருக்கிறதாக நினைக்கவில்லை) நிச்சயம். யாதொரு காரணத்தால் நீர் எனக்கு (என்னை) நியமிக்க மிக்க பாத்தியதையுள்ளவராயிருந்தும் அரசரை (தசரதரோடு) சொன்னீரோ.

பெ—வ்யா. (பெரிய திருமொழி. 2-3-1) [நநாநம் மயி கைகேயி]—'சக்ர வர்த்தி வார்த்தை சொல்லமாட்டாமை இருக்கிறுனத்தனே. உம்முடைய தம்பிக்கு ராஜ்யத்தைக் கொடுத்தான். உம்மைக் காடேறப்போகக்காணு மவன் நினைத்திருப்பது' என்று சக்ரவர்த்தி கருத்தைச் சொல்ல, அதைக்கேட்டு 'நடுவிலாய்ச்சி திருவடிகளிலே அழுந்தாக சுச்ரூஷித்தோ மென்றிருந்தோம். நம் பக்கல் ஒருகுணமுண்டாக நினைத்திராமையிறே தாம் போகச்சொல்லாமே ஐயர் கருத்தாக அருளிச்செய்தது' என்று 'ஜயரோபாதியாகவோ உம்மை நினைத்திருப்பது? அவரை ஈச்வரராகவும் உம்மை ஈச்வரதரையாகவுமிறே நினைத்திருப்பது' என்றுளிறே.

१९. राज्यं च तव रक्षेयमहं वेलेव सागरम् ।
प्रतिजानामि ते वीर ! मा भूवं वीरलोकभाक् ॥

ராஜ்யஞ்ச தவ ரக்ஷேயமஹம் வேலேவ ஸாகரம்,
ப்ரதிஜாநாமி தே வீர! மாபூவம் வீரலோகபாக். 23-28. 19

நான் தேவரீருடைய ராஜ்யத்தையும் கரை ஸமுத்திரத்தைப்போலே காப்பாற்றுவேன். ஓ வீர! தேவரீரின் பொருட்டு (தேவரீரிடத்தில்) ப்ரதிஜ்ஞை பண்ணுகிறேன். (இல்லாவிடில்) வீரர்களுக்குரிய லோகத்தை அடைபவனாய் (நான்) ஆகக்கடவனல்லன்.

பெ—வ்யா. (கண்ணிநுண்சிறுத்தாம்பு ப்ரவேசம்) [ராஜ்யஞ்ச தவ ரக்ஷேயம்]—'ராஜ தர்மேண பிவேந' என்கிறபடியே உம்முடைய ரக்ஷணம் பண்ணுகை யன்றிக்கே, உம்முடைய ராஜ்யத்தையும் ரக்ஷிக்கக்கடவேன். எனக்கு தாதர்த்யம் ஸ்வரூபமாகிலும் உம்மால் என்னை மீறவொண்ணாது காணும். [அஹம் வேலேவ ஸாகரம்]—கடலுக்குக் கரை சேஷமாயிருக்கச் செய்தேயும், கரையை அதிக்ரமிக்க மாட்டாதிறே கடல். அப்படியே 'நீர் பெரியீர்' என்னா, உம்மாலென்னை விஞ்ச வொண்ணாது காணும். [ப்ரதிஜாநாமி]—நானிப்படி ப்ரதிஜ்ஞையைப்பண்ணு கிறேன். தே வீர—ஒரு கோதை முன்னேயோ நான் ப்ரதிஜ்ஞை பண்ணிற்று; [illegible] திஜ்ஞை பண்ணிலும் அதைத் தலைக்கட்டித்தரவல்ல ஆண்பிள்ளைத்தனமுடைய உம் முடைய [illegible] [மா பூவம்]—இப்படிச்செய்திலேனாகில், உம்முடைய லென்னி[illegible] வர்த்திக்கை[illegible]மன்றிக்கே, உம்முடைய ராஜ்யத்திலும் வர்த்திக்கப்பெறுதலைாக்கிறேன். [வீரலோகபாக்]—உம்மை முடிசூட்டி அநுபவிக்கப் பாரித்து அதுபெறாதே போன சக்ரவர்த்தி புக்க லோகம் புகுகிறேன்.

२०. ईर्ष्यारोषौ बहिष्कृत्य भुक्तशेषमिवोदकम् ।
नय मां वीर विस्रब्धः पापं मयि न विद्यते ॥

ஈர்ஷ்யாரோஷௌ பஹிஷ்க்ருத்ய புக்தசேஷ மிவோதகம்,
நய மாம் வீர விஸ்ரப்த: பாபம் மயி நவித்யதே. 27-8. 20

ஓ வீர! அஸூயை கோபம் ஆகிய இவைகளை, குடித்து மிச்சமுள்ள ஜலத்தைப் போல தள்ளிவிட்டு நம்பிக்கையுள்ளவராய் என்னை அழைத்துக்கொண்டுபோம். என்னிடத்தில் பாபம் கிடையாது.

பெ—வ்யா. (பெரியதிருவந்தாதி. 9) [ஈர்ஷ்யாரோஷாவித்யாதி] "அதிலே துஷ்டஸத்வங்களும் ராக்ஷஸருமுண்டு; ஸுகுமாரையாயிருக்கிற உன்னைக் கொடுபோக வொண்ணாது" என்று பெருமாள் அருளிச்செய்ய, ப்ரணயரோஷத்தாலே பிராட்டி விண்ணப்பம் செய்கிறாள்—உம்முடைய பின்னே போந்தேனென்று எனக்கொரு உயர்த்தி உண்டாங்காட்டில் உமக்கு இத்தனை பொருமையும் சீற்றமும் வேணுமோ?

'பிதாவினுடைய வசநத்தை அநுவர்த்தித்துக் காடேறப் போனர்' என்று உமக்கு ஒரு உயர்த்தி தேடுகிறவோபாதி உம்முடைய பின் போந்தேனென்று எனக்கொரு உயர்த்தி உண்டானலாகாதோ? [ஈர்ஷ்யாரோஷௌ பஹிஷ்க்ருத்ய புக்தசேஷமிவோதகம்]—வஸிஷ்ட்ட சிஷ்யராய் ஜ்ஞாநவான்களானல், த்யஜிக்கப்படுமவை த்யஜிக்கவேணும் காணும். [நய மாம்]—அஸூயையும் கோபமும் போனல் பரஸம்ருத்தியேயிறேயுள்ளது; ஆனபின்பு என்னைக் கொடுபோகீர். [வீர]—பரஸம்ருத்தி உண்டானல் கொடுபோகாதொழிகைக்கடி வீர்யத்தில் கொத்தையிறே; அதில்லையிறே உமக்கு. [விஸ்ரப்த:]—உம்மை நீரறியீர். என்னை விச்வஸித்துக் கொடுபோம். [பாபம் மயி ந வித்யதே]—உம்மைப் பிரிந்து ஜீவிக்கைக்கடியான பாபமெனக்கில்லை காணும். பாபமாவது க்லேசஹேதுவிறே. உம்மைப் பிரிந்து க்லேசப்படுமதில்லை காணுமெனக்கு.

ஈடு. (தி—வாய். 6-2. ப்ரவேசம்) [ஈர்ஷ்யாரோஷௌ பஹிஷ்க்ருத்ய]—பிறருயர்த்தி கண்டால் பொறுக்கவேண்டாவோ. நான் 'உம்மோடேகூடப்போர' என்று புறப்பட்டு நாலடியிட்டால், எனக்கு அத்தால் வரும் ஏற்றம் கண்டு பொறுக்க மாட்டாமையால் உண்டான கோபாஸூயைகளைப் பொகடும். [புக்தசேஷமிவோதகம்]—இதுவுமப்படியாகாதே தான். ப்ரணயிகள் கோஷ்டியில் இங்ஙனே காணும் பரிமாற்றம். ப்ரணயிநிக்குண்டான தன்னேற்றம் தன்னதாயிருக்க வேண்டாவோ. [நய மாம் வீர]—என்னை அறியாதாப்போலே உம்மையும் அறிந்திலீராகில், நான் சொல்லக் கேளும். உமக்கு ஒரு குறைகளுமில்லை காணும்; என்னைக் கொடுபோகப் பாரும். [விஸ்ரப்த:]—தந்தாமை அறியாவிட்டால் ஆப்தர்வாயிலே கேட்டறிய வேணும் காணும். [பாபம் மயி ந வித்யதே]—பொகடும்; இங்ஙனன்றாகில், நீர் என்னை இங்கே நிறுத்திப்போனல், நீர் மீண்டும் வருந்தனையும் தரித்திருக்கைக்கு வேண்டும் ஹேது எனக்கில்லை காணும். இப்படியிறே ப்ரணயரோஷம் தலையெடுத்தாவிருக்கும்படி.

२१. किं त्वाऽमन्यत वैदेहः पिता मे मिथिलाधिपः ।
राम ! जामातरं प्राप्य स्त्रियं पुरुषविग्रहम् ॥

கிந்த்வாமந்யத வைதேஹ: பிதா மே மிதிலாதிப:,
ராம! ஜாமாதரம் ப்ராப்ய ஸ்த்ரியம் புருஷவிக்ரஹம். 30-3. 21

ஓ ராமா! விதேஹ குலத்தில் பிறந்த மிதிலாநகரிக்கு அதிபதியான என் தகப்பனர் (ஜநகமஹாராஜன்) பெண்ணைப் (பெண்போல தைரியமில்லாத) புருஷசரீரமுள்ள உம்மை மணவாளனக (மாப்பிள்ளையாக) அடைந்து என்ன நினைப்பர்.

திருவாய்மொழிப்பிள்ளை வ்யாக்யானம். (பெரியாழ்வார் திருமொழி. 2-1-2) [ஸ்த்ரியம் புருஷவிக்ரஹம்]—"எங்கள் ஐயர் கேட்கில் 'பெண்ணுக்குப் பெண்ணைக் கொடுத்தோம்' என்று என்னை நிறுத்திப் போகில் போர வெறுத்துச் சொல்லுவர். அது என்னல் கேட்கப் போகாதென்று கிடீர் எனக்கு க்லேசம். நீர் நிறுத்திப்போனல் நிற்கும் பாபம் எனக்குமில்லை; நீர் தாமும் நிறுத்திப் போகிறவருமல்ல. ஆயிருக்க இந்த நெஞ்சொழிந்த பலவார்த்தை சொல்லி அலவலையாகவேணுமோ" என்றருளிறே. (அலவலை என்பது—அர்த்தகௌரவமும் அதிகாரி குணகுணமும் பாராதே தன்நெஞ்சில் ப்ரதிபந்நமானவற்றைச் சொல்லுமவனிறே)

ஈடு. (தி—வாய். 6-2. ப்ரவேசம்) [ப்ரணயாச்சாபிமாநாச்ச பரிசிக்ஷேப ராகவம்] அவரோடுண்டான சிரபரிசயத்தாலும் கலவியாலும் 'என்னுடையவரன்றோ' என்கிற வேண்டப்பாட்டாலும் பெருமானை மேலிட்டு வார்த்தை சொன்னள். என் சொன்னளென்னில்—[கிந்த்வாமந்யத வைதேஹ: பிதா மே மிதிலாதிப:, ராம ஜாமாதரம் ப்ராப்ய ஸ்த்ரியம் புருஷவிக்ரஹம்]—வாரீர், ஒருவனுக்காற்றுவொருத்தி உண்டோ? என்னை

ஒருத்தியையும் நோக்கமாட்டாமையே வைத்துப் போகப் புகுகிறது. இருக்கிறது எங்கள் ஐயர் கேட்கில் போரவெறுப்பர். ஒரு பெண் பெண்டாட்டி. ஆணுடை உடுத்து என் மகளைக் கைப்பிடித்துக் கொண்டு போனவித்தனையாகாதே என்றிராமே கடுகக் கொண்டு போகப் பாரும்.

२२. यस्त्वया सह स स्वर्गो निरयो यस्त्वया विना ।
इति जानन् परां प्रीतिं गच्छ राम मया सह ॥

யஸ்த்வயா ஸஹ ஸஸ்வர்கோ நிரயோ யஸ்த்வயாவினா,
இதிஜாநந் பராம் ப்ரீதிம் கச்ச ராம / மயாஸஹ. 30-18. 22

ஓ ராம! உம்மோடுகூடி யாதொரு (வாஸம் உண்டோ) அது ஸுவர்க்கம். உம்மைப் பிரிந்து யாதொரு (வாஸமுண்டோ) அது நரகம். என்கிற சிரேஷ்டமான ப்ரீதியை அறிந்தவரான நீர் என்னோடு கூடிப்போம் (புறப்படும்).

ஈடு. (தி—வாய். 2-10-7.) [யஸ்த்வயா ஸஹஸஸ்வர்கஃ]—"காட்டிலே போமது துக்கம், படைவீட்டிலே இருக்குமது ஸுகம்" என்றுயிற்று பெருமாள் அருளிச்செய்தது. அங்ஙனல்ல—ஸுகதுக்கங்கள் வ்யக்திதோறும் வ்யவஸ்த்திதமாய் காணுமிருப்பது. யாதொன்று உம்மோடே பொருந்துகிறது, அது ஸுகமாகிறது. உம்மை ஒழியப் படைவீட்டிலிருக்கு மிருப்பு துக்கமாகிறது. [இதிஜாநந்]—தந்தாமுக்கில்லாதவை, பிறர் பக்கலிலே கற்றறியவேணும் காணும். [பராம் ப்ரீதிம்]—உம்மைப்போலே நிறுத்தல்ல காணும் என் ப்ரீதியிருப்பது. நம்மில் உனக்கு ப்ரிதி பரையாகச் சொன்னாய்; அதுக்கு நம்மைச் சொல்லுகிறதென்னென்ன—[கச்ச ராம மயாஸஹ]—அக்ரதஸ்தே கமிஷ்யாமி" என்று நான் புறப்பட்டபடியே என்னை முன்னே போக விட்டுப் பின்னே வரப் பாரும்.

२३. न देवलोकाक्रमणं नामरत्वमहं वृणे ।
ऐश्वर्यं वाऽपि लोकानां कामये न त्वया विना ॥

நதேவலோகாக்ரமணம் நாமரத்வமஹம் வ்ருணே,
ஐச்வர்யம் வாபி லோகாநாம் காமயே நத்வயாவிநா. 31-5. 23

உம்மை விட்டு பரமபதப்ராப்தியையும் கைவல்யத்தையும் உலகங்களுக்கெல்லாம் அதிபதியாயிருப்பதையும் விரும்பமாட்டேன்.

பெரி—வ்யா. (பெரிய திருவந்தாதி. 79) [நதேவலோகாக்ரமணம்]—பறைச்சேரியிலடியிடுமாபோலே ஸ்வர்க்கத்திலடியிடுகை வேண்டேனென்கிறார். தாம்யாந்தராயோ மைத்ரேய தேவேந்த்ரத்வாதிகம் பதம்.—பகவத்விஷயத்திலே கைவைத்தவனுக்கு அந்தராயமாவது இந்த்ரனாயிருக்குமிருப்பிறே.

ஈடு. (தி—வாய். மஹாப்ரவேசம்) 'வானவர்நாடு' என்கிற பரமபதம், ஆத்மலாபம், லோகாநாம் ஐச்வர்யம் இவையித்தனையும் உமக்குப் புறம்பாய் வருமன்று வேண்டேன்.

२४. कुरुष्व मामनुचरं वैधर्म्यं नेह विद्यते ।

குருஷ்வ மாமநுசரம் வைதர்ம்யம் நேஹவித்யதே. 31-24. 24

என்னை வேலைக்காரனாகச் செய்துகொள்ளும். இந்த விஷயத்தில் எதிரிடையானது இல்லை.

ஈடு. (தி—வாய். 2-9. ப்ரவேசம்) இளைய பெருமாள், 'நில்' என்ன [குருஷ்வ] என்றாரிறே. அந்வயத்தாலே தரிக்கக் கடவ வஸ்துவை வ்யதிரேகித்து நிற்கச் சொல்

லுகையாவது அழிக்கையிறே. 'குரு' என்னாதே 'குருஷ்வ' என்றாரிறே. ஆருண்டாய்ப் ப்ரயோஜநத்துக்கு ஆர்தான் இருக்கிறார், உம்முடைய இழவுக்கு நீர் பதறுகிறதென்! [அநுசரம்]—பண்ணும் ப்ரகாரத்தை விதிக்கிறார். நீர்தாம் 'நில்' என்று அருளிச்செய்தது—நான் நிற்கச் சொல்லுகைக்கு யோக்யனும்படியிருக்கையிறே. உம்முடைய சாயையை 'நில்' என்று சொல்லிற்றிலீரே. சாயையோபாதி உம்மைப் பின் செல்வேனாகவேணும்.

२५. सृष्टस्त्वं वनवासाय स्वनुरक्तः सुहृज्जने ।
रामे प्रमादं मा कार्षीः पुत्र भ्रातरि गच्छति ॥

ஸ்ருஷ்டஸ்தவம் வநவாஸாய ஸ்வநுரக்தஸ்ஸுஹ்ருஜ்ஜநே,
ராமே ப்ரமாதம் மாகார்ஷீ: புத்ர! ப்ராதரி கச்சதி. 25

ஓ புத்ர! நீ மித்திரர்களிடத்தில் விசேஷமாகப்ரீதியுள்ளவன். காட்டில் வஸிப்பதற்காக உண்டுபண்ணப்பட்டாய். ஸஹோதரனை, ராமன் போகும்பொழுது தவறுதலைச் செய்துவிடாதே.

ஈடு. (தி—வாய். 3-3-10) [ஸ்ருஷ்டஸ்த்வம் வநவாஸாய]—ஐயர் சொல்லிற்றுச் செய்யவேண்டுகையாலே பெருமாள் காடேற எழுந்தருளாநின்றார். நானும் கூட சேவித்துப்போவேனென்ன, அவர் காட்டிலே எழுந்தருளாநிற்கப் படைவீட்டிலே இருக்கைக்கோ நாம் உம்மைப்பெற்றது? நீர் இப்படிச்செய்தீராகில் நான் உம்மைப் பெற்ற ப்ரயோஜனம் பெற்றேனாகிறேன். அவர்க்கு யாதொருபோது துணைவேண்டிற்று, அப்போது நீர் துணையாகைக்காகவன்றோ நானும்மைப்பெற்றது. [ஸ்வநுரக்தஸ் ஸுஹ்ருஜ்ஜநே]—நீர் ஸுஹ்ருஜ்ஜநத்தின் பக்கல் ஸ்வநுரக்தரல்லீரோ. ஆகையாலே எல்லார்க்கும் வேர்ப்பற்றான பெருமாளை நோக்கித் தாரீர். அன்றிக்கே, [ஸுஹ்ருஜ்ஜநே ராமே]—என்றாய் பெருமாள் பக்கல் பண்டே ஸ்நேஹித்தன்றோ நீர் இருப்பது. இப்போது 'போம்' என்று நான் உமக்குச் சொல்லவேண்டியிருந்ததோ. [ராமே ப்ரமாதம் மாகார்ஷீ:]—இப்படி யிருக்கிற உம்மை நியமிக்கவேண்டுவதொன்றுண்டு—ப்ரமாதத்தைப் பண்ணாதே கொள்ளும். ஏன்றான், ப்ரமாதம் என்னென்னில்—[புத்ர ப்ராதரி கச்சதி]—உங்கள் தமயனார் நடப்பர்கிடீர். அவர் நடையிலே நடை கொள்வர். அவர் நடையழகிலே கண்வைத்துக் காவற்சோர்வு படவிடாதே கொள்ளும்.

ஈடு. (தி—வாய். 3-9 9) [ஸ்ருஷ்டஸ்த்வம் வநவாஸாய]—"ஐயரையும் ஆய்ச்சியையும் அநுவர்த்தித்துப் பெருமாள் காடேற எழுந்தருளாநின்றார். நானும் அவரை அநுவர்த்தித்துப் போகிறேன்" என்று இளையபெருமாள் அறிவிக்க, உமக்கு முடிவேணுமென்று அபேக்ஷை உண்டாகில், முடி சூடுகைக்கு யோக்யனாயிருப்பானொருவன் வேணுமென்றதுக்கீடாக நோன்பு நோற்றேனோ, அவரை அநுவர்த்திக்கைக்காகவன்றோ நான் உம்மைப்பெற்றது. [ஸுஹ்ருஜ்ஜநே ராமே ஸ்வநுரக்த:]—உபதேசநிரபேக்ஷமாகப் பெருமாள் திருவடிகளுக்கு நீரே பரிவரிறே, நான் இன்றிருந்து சொல்லவேண்டுவதொன்றுண்டோ, அடிமையிலுண்டான ருசி செவிகண்ணாகக்கண்டடிமை செய்யுமவரிறே, அன்றிக்கே, ஸ்வநுரக்தஸ்ஸுஹ்ருஜ்ஜநே—'கருமுகை மாலையை வெய்யிலிலே இட்டாற்போலே, பெருமாள் தம் ஸௌகுமார்யம் பாராதே பித்ரநுவர்த்தநம் பண்ணிக் காட்டிலே போகாநின்றார். 'என்புகுகிறதோ' என்று வயிறெரிந்திருக்கிற ஸுஹ்ருஜ்ஜநங்களுக்கு நல்லீரிறே. ஸுஹ்ருஜ்ஜநமென்கிறது—திருத்தாயார் தொடக்கமான படை வீட்டிலுள்ளாரை. அவர்களுக்கு வேர்ப்பற்றான இவரை நோக்கித் தாரீரென்றும். ராமே—கட்கை மிகையாம்படி, வெறுமனேயிருந்தாலும் ஆகர்ஷகமான வடிவழகையுடையவர். [ராமே ப்ரமாதம் மாகார்ஷீ:]—'பால்யாத்ப்ரப்ருதி ஸுஸ்நிக்த:' என்று அவதாரகாலமே தொடங்கி அன்வயத்தில் தாித்த

வ்யதிரேகத்தில் தரியாதவர்க்கு இன்றாக ஒரு ப்ரமாதம் புகுருகைக்கு சங்கையில்லை யிறே. ஸம்பாவிதமானதொன்றைச் சொல்லுகிறுளாகவேணுமே; [ப்ராதரி கச்சதி]— அவர் உம்முடைய முன்னே நடப்பர் கிடீர். அவ்வழகிலே கண்வைத்து, நீர் அதிகரித் ததுக்குச் சோர்வு பிறவாதபடி குறிக்கொள்ளும். அக்ரதஃ ப்ரயயௌ—நடைச் சக்ரவத் துப் பிடிக்கலாம்படி.

२६. रामं दशरथं विद्धि मां विद्धि जनकात्मजाम् ।
अयोध्यामटवीं विद्धि गच्छ तात यथासुखम् ॥

ராமம் தசரதம் வித்தி மாம் வித்தி ஜநகாத்மஜாம்,
அயோத்யாமடவீம் வித்தி கச்ச தாத! யதாஸுகம். 40-9. 26

அப்பனே! ராமனை தசரதனாக அறிந்துகொள். (நினைந்து நடந்துகொள்) ஸீதையை நானாக அறிந்துகொள். காட்டை அயோத்தியாக அறிந்துகொள். ஸுகமாக போ.

பெ—வ்யா. (நான்முகன் திருவந்தாதி. 47) ரக்ஷணத்துக்கு உறுப்பாகையாலே திருவயோத்யையிலும் காட்டை விரும்பினாரிறே பெருமாள். அவர் விரும்பின காட்டை விரும்பிப்போகிற இளையபெருமாளை அக்காட்டோபாதி இப்படைவீட்டையும் நினையுங் கிடீரென்றாரிறே திருத்தாயார்—[ராமம் தசரதம் வித்தி]—'வத்த்யதாம் பத்த்யதாம்' என்று அருவராதே உங்கள் தமயனாரோபாதியாக உங்களையரையும் நினையுங்கிடீர். [மாம் வித்தி ஜநகாத்மஜாம்]—உங்கள் தமையனாருகந்த பிராட்டியோபாதி என்னையும் நினையுங்கிடீர் என்கிறார்.

२७. ये तु रामस्य सुहृदः सर्वे ते मूढचेतसः ।
शोकभारेण चाक्रान्ताः शयनं न जहुस्तदा ॥

யேது ராமஸ்ய ஸுஹ்ருதஃ ஸர்வே தே மூடசேதஸஃ,
சோகபாரேண சாக்ராந்தாஃ சயநம் நஜஹுஸ்ததா. 27

ராமனுக்கு ஸ்நேஹிதர்கள் எவர்களோ; அவர்களெல்லாரும் அறிவழிந்த மன முடையவர்களாய் அதிகதுக்கத்தால் ஆக்ரமிக்கப் பட்டவர்களாய் அப்பொழுது படுக் கையை விடவில்லை. (விட்டெழுந்திருக்கவில்லை)

பெ—வ்யா. (நாச்சியார் திருமொழி. 3-1.) [யே து]—சக்ரவர்த்தி போக்கை அநுமதிபண்ணினான். ஸ்ரீ கௌஸல்யார் மங்களாசாஸநம் பண்ணிவிட்டார். அவ்வள வன்றிக்கே, பத்தொன்பதாம் பாஷையாய்த்து தோழன்மார்படி. [ராமஸ்ய ஸுஹ்ருதஃ]—தாய்தகப்பனுக்கு மறைத்தவையும் வெளியிடும்படி உட்புக்கவர் களிறே தோழன்மாராகிறார். தங்களைப் பேணாதே அவனுக்கே நன்மை எண்ணிப் போந்தவர்கள் படுகுலைப்பட்டார்களென்கிறது. [ஸர்வே தே]—ஒரு விபூதியாக ஸாம் யாபத்தி பெற்றிருக்குமாபோலே. [மூடசேதஸஃ]—ஸுஹ்ருத்துக்களாகில் எழுந் திருந்து காலைக்கட்டி மீளாதொழிவானென்னென்னில்—அறிவு கலங்தால் செய்யுமத்தை நெஞ்சில் வெளிச்செறிப்பில்லாதபோதும் செய்யப்போகாதிறே. அறிவு கெடுகைக்கு ஹேதுவென்னென்னில்—[சோகபாரேண சாக்ராந்தாஃ]—மலை அமுக்கினாப்போலே சோகம் அமுக்காநிற்கச் செய்வதென்? [சயநம் நஜஹுஸ்ததா]—படுக்கையை விட் டெழுந்திருந்தார்களாகில் மீட்டுக் கொடு புகுந்த வாசியன்றோ. தாந்தாமே படுக்கை யில் கிடந்து போந்தவர்களன்றே.

२८. पुत्रद्वयविहीनं तत् स्नुषया च विवर्जितम् ।
अपश्यद्भवनं राजा नष्टचन्द्रमिवाम्बरम् ॥

புத்ரத்வயவிஹீநம் தத் ஸ்நுஷயா ச விவர்ஜிதம்,
அபச்யத் பவநம் ராஜா நஷ்டசந்த்ரமிவாம்பரம். 42-30. 28

அரசன் (தசரதன்) இரண்டு பிள்ளைகளுமில்லாததும் நாட்டுப் பெண்ணுமில்லாததுமான அந்த கிருஹத்தை சந்த்ரனில்லாத ஆகாசத்தைப்போலே கண்டான்.

ஈடு. (தி--வாய். 6-7. ப்ரவேசம்) [புத்ரத்வயவிஹீநம் தத்]—சக்ரவர்த்தி பிள்ளைகளிருவரையும் தேடிப் போர [illegible]. [ஸ்நுஷயாச விவர்ஜிதம்]—'மீண்டு மிவ்விடத்தை விரும்புவர்கள்' என்று நினையாதபடி குழைசரக்கறுத்துக்கொண்டு போனபடி. [அபச்யத் பவநம் ராஜா நஷ்டசந்த்ரமிவாம்பரம்]—நிலவோடும் நக்ஷத்ர தாரகணங்களோடுங்கூட சந்த்ரன் குடிவாங்கின ஆகாசம்போலே கிடந்தது.

२९. रामं मेऽनुगता दृष्टिरद्यापि न निवर्तते ।
न त्वा पश्यामि कौसल्ये साधु मा पाणिना स्पृश ॥

ராமம் மேநுகதா த்ருஷ்டிரத்யாபி ந நிவர்த்ததே,
ந த்வா பச்யாமி கௌஸல்யே ஸாது மா பாணிநா ஸ்ப்ருச. 42-34. 29

ராமனைப் பின்தொடர்ந்து சென்ற என்கண் இன்னமும் திரும்பவில்லை. ஓ கௌஸலை! உன்னைக் காணுகிறேனில்லை. (உனது) கையினால் என்னை நன்றாகத் தொடு.

பெரி—வ்யா. (திருமாலை 17) [ராமம் மேநுகதா த்ருஷ்டி:]—கர்த்தாவை ஒழியவே கரணங்களுக்கே அந்வயவ்யதிரேகங்களிலே சோகஹர்ஷங்களுண்டாம்படியிறே விஷயஸ்வபாவமிருப்பது.

பே—வ்யா. (நாச்சியார். 10-7) [ராமம் மே இத்யாதி]—கொண்ட வஸ்து இனி மீளப் புகுகிறதோ? [மே]—அக்கடலிலே இழியாதிருக்கமாட்டாதார்க்கு ஏறப்போமோ? [அத்யாபி ந நிவர்த்தே]—அவரைக் காணப்பெறுவிட்டால் அவரைப் பெற்ற ஸௌபாக்யமுடைய உன்னைக்காண்கைக்கு நல்ல காலமிறே; இவ்வளவிலும் மீளுகிறதில்லை. [நத்வா பச்யாமி கௌஸல்யே]—பெருமாள் முகத்திலே விழிக்கப்பெறாதே, கைகேயிமுகத்திலே விழித்தத்தால் வந்த தாபமெல்லாம் ஆறும்படி உன்னைக் காணவேணுமென்று ஆசைப்படாநின்றேன்; அது செய்யப்பெறுகிறிலேன். [ஸாது மா பாணிநா ஸ்ப்ருச]—இந்த்ரியங்கள் தான் நித்யாதீந்த்ரியவஸ்துக்களாகையாலே கார்யகல்ப்யமிறே. ரூபக்ரஹணாபாவத்தாலே சக்ஷுரிந்த்ரியம் குடிபோய்த்ததென்றிருந்தேன்; த்வகிந்த்ரியம் கிடந்ததோ இல்லையோ என்று ஸ்பர்சித்துப் பார்க்க வல்லையோ? ஸாது ஸ்ப்ருச—"கைகேயியோடே க்ருதஸங்கேதனாய்ப் பெருமாளைக் காடேறப் போகவிட்டான். அவர் கை கழியப்போனார்; இனி மீளார்' என்றறிந்த வாறே, பொய்யே கூத்தடிக்கிறான்" என்றிராதே, 'இவனுக்கு இது ஸம்ஸர்க்கத்தாலே வந்தது. ஐயோ என் செய்வான். பாவி அகப்பட்டான்' என்னும் நெஞ்சோடேகூட என்னை ஸ்பர்சிக்க வல்லையே.

பே—வ்யா. (திருநெடுந்தாண்டகம். 9) [மே த்ருஷ்டி: ராமம் அநுகதா]—என்னுடைய கண்ணானது அபிராமதையைப் பற்றிப் பெருமாள்பின்னே போயிற்று. ஆச்ரயத்தை விட்டு விஷயத்தின் பின்னே போயிற்றது. பிறந்தகத்தில் ஸம்பந்தம் விஷயம் பெறுமளவும்போலே காணும். மே த்ருஷ்டி: என்று கண்ணைக் கொண்டாடுகிறான். நான் விச்லேஷத்தாலே தளர்ந்து தரைப்பட்டுக் கிடந்தேன்; கண் கூடப்

போகப் பெற்றதிறே. கர்த்தாவாயிராதே கரணமாகப் பெற்றிலேனென்கிறான். [அத்யாபி ந நிவர்த்ததே]—இவ்வளவிலும் மீண்டதில்லை; உன்னுடைய தர்சநத்தாலே ஆச்வஸிப்பிக்க யோக்யதை உண்டான தசையிலும் மீண்டதில்லை. [நத்வா பச்யாமி]—ஆச்ரயமான நீர் இங்கேயிருக்கக் கண் அவர்பின்னே போகையாவதேதனென்னில்—வந்து நிற்க உன்னைக் கார்யத்தைக்கொண்டு காரணத்தைக் கல்பித்தேனென்கிறான். நித்யாநுமேயமாயிறே இந்த்ரி காணப்பெற்றிலேனே; அத்தாலே சொல்லுகிறேன். யங்களிருப்பது. [கௌஸல்யே]—கைகேயியாயிட்டுக் காணாதொழிகிறேனன்றே. [ஹஸ்து மா பாணிநா ஸ்ப்ருச]—என்னுடைய அதிக்ரமத்தை நினையாதே துர்க்கதியைப் பார்த்து 'ஐயோ' என்றிரங்கி ஸ்பர்சியாயென்கிறான். "கண்ணானது அவன் பின்னே போயிற்று. த்வகிந்த்ரியம் போயிற்றோ இல்லையோ என்று அறியும்படி உன் கையாலே தடவிப் பாராயென்கிறான்" என்று அருளிச்செய்வர் பட்டர்.

ஈடு. (தி-வாய். 3-8-3) [ராமமித்யாதி]—கடல்கொண்ட வஸ்து மீளுமோ? அறுபதினாயிரமாண்டு மலடு நின்று பட்டினி விட்ட என்கண்கள் மீளுமோ? நல்லது கண்டு கால் தாழ்ந்தத்தை இனி 'நம்மது' என்று வழக்குப் பேசினால் பசையுண்டோ? [அத்யாபி]—தன்னைக்கொண்டு கார்யங் கொள்ளவேண்டு மிறைக்கும் உதவுகிற தில்லை. அவரைக் காணவிட்டால், அவரைப் பெற்ற ஸௌபாக்யமுடைய உன்னைக் கண்டு தரிக்க வேண்டு மிவ்வளவிலும் மீளுகிறதில்லை.

३०. कथं दाशरथौ भूमौ शयाने सह सीतया ।
शक्या निद्रा मया लब्धुं जीवितं वा सुखानि वा ॥

கதம் தாசரதௌ பூமௌ சயாநே ஸஹஸீதயா,
சக்யா நித்ரா மயா லப்தும் ஜீவிதம் வா ஸுகாநி வா. 51-9. 30

தசரத புத்ரனாகிய ஸ்ரீராமன் ஸீதையோடு கூட தரையில் படுத்திருக்கும்போது என்னால் தூக்கம் அடையப்பட எப்படி முடியும்? ஜீவிதமாவது ஸுகங்களாவது எப்படி அடையப்பட முடியும்?

பெ—வ்யா. (திருவிருத்தம். 30.) "நிசாமதிஷ்டத் பரிதோஸ்ய கேவலாம்" என்று பெருமாள் ஸ்ரீகுஹப்பெருமாள் பரிஸரத்தே கண் வளர்ந்தருளுகிற விடத்திலே ஜங்கமமான மதிள்போலே கையும் வில்லுமாய் இளையபெருமாள் திரிகிறபடியைக் கண்டு ஸ்ரீகுஹப்பெருமாள் "இயம் தாத ஸுகா சய்யா த்வதர்த்தமுபகல்பிதா" என்று உகந்துத் தகுதியாம்படி பெருமாள் திருவடிகளிலே தளிராலே படுக்கை படுத்தேன். கண்வளர்ந்தேரென்ன—[கதம் தாசரதௌ பூமௌ சயாநே]—என்று அறுபதினாயிரம் ஸம்வத்ஸரம் மலடு நின்று பெற்ற பிள்ளை ஸுகுமாரமான வடிவைக்கொண்டு தரைக் கிடை கிடக்கக் கண் உறங்குமோ? [சயாநே ஸஹ ஸீதயா]—இவர் வலியராயிருக்கை யாலே இக்கிடை கிடக்கவும் பொறுக்கும். படி நடந்து புறப்பட்டறியாத செல்வப் பெண்பிள்ளை தரைக்கிடை கிடப்பதே! [சக்யா நித்ரா மயா லப்தும்]—என் கண்தன்னில் நித்ரை குடி புகுகிறதில்லை காணும்.

ஈடு. (தி—வாய். 5-9-4) பெருமாளும் இளையபெருமாளும் பிராட்டியும் ச்ருங்கி பேரபுரத்திலே விட்டருளினவன்று ஸ்ரீகுஹப்பெருமாள் இளையபெருமாளைப் பார்த்து, "பெருமாளும் பிராட்டியும் கண்வளரா நின்றார்கள். உமக்கீடாம்படி திருவடிகளிலே தலையாம்படி படுக்கை படுத்தேன். நாங்கள் காடராய் அங்கேயிங்கே திரிகையாலே எங்களுக்கு உறக்கம் வாராது. நீர் ராஜபுத்ரராகையால் ஸுகுமாரர். 'பரதாதிகள் வருவர்கள்' என்று அஞ்சவேண்டா. நானும் என் பரிகரங்களுமுண்டு. நீர் கண் வளர்ந்தருளும்" என்ன—[கதம் தாசரதௌ பூமௌ சயாநே ஸஹ ஸீதயா]—வாரீர்,

மஹாராஜனான சக்ரவர்த்தி அறுபதினாயிரமாண்டு அபத்யனாய் வருந்திப் பெற்ற ஸுகுமாரனான பெருமாள் தரைக்கிடை கிடக்க, எனக்குக் கண்ணுறங்குமோ? அவர் தாம் வஸிஷ்டாதிகள் கீழே தரையிலே யிருந்துமறிவர். அதுவுமின்றிக்கேயிருக்கிற பிராட்டியோடே கூடக் கிடக்கிற கிடை பாரீர். ஆனபின்பு, எனக்கு உறக்கமுண்டாய் அது போகைக்கு அபிஸந்தி பண்ணியிருக்கிறேனல்லேன் காணும். உறக்கம் தேட்டமாய்க் கிடையாமையாலே யிருக்கிறேன்.

३१. न च सीता त्वया हीना न चाहमपि राघव ।
मुहूर्तमपि जीवावो जलान्मत्स्याविवोद्धृतौ ॥

ந ச ஸீதா த்வயா ஹீநா நசாஹமபி ராகவ,
முஹூர்த்தமபி ஜீவாவோ ஜலாந்மத்ஸ்யாவிவோத்த்ருதௌ. 53-31. 31

ஓ ராமா! ஸீதை உம்மோடு பிரிந்தவளாய் உயிருடனிருக்கமாட்டாள். நானும் (உம்மை விட்டுப் பிரிந்தவனாய்) ஜீவிக்கமாட்டேன். ஜீவிப்போமேயானால் ஜலத்திலிருந்து எடுக்கப்பட்ட இருமீன்களைப்போலே கொஞ்சகாலந்தான் பிழைத்திருப்போம்.

பே—வ்யா. (பெரியதிருமொழி. 4-9-1) [நசஸீதேத்யாதி]—தேவரை ஒழிந்தவன்று பிராட்டியும் உளள்காள், அடியேனும் உளனாகேன். தேவரை ஒழிந்தவன்று முதலிலே ஜீவிக்குமதுதானில்லை. [அபிஜீவாவயதி ஜீவாவ:— முஹூர்த்தம்]—ஒரு க்ஷணகாலம். [ஜலாந்மதஸ்யாவிவ]—ஜலத்தைப் பிரிந்த மத்ஸ்யம் ஜீவிப்பது அந்நீர் நசை அறுமளவுமிறே. அப்படியே நில் என்று சொன்ன வார்த்தை உம்முடைய திருவுள்ளத்திலேயும் உண்டென்று அறியுமளவும் காணும் நாங்கள் ஜீவிப்பது. இவருடைய ஸத்தை உண்டு உண்மை. அது நிலா தென்றல் சந்தனம் தண்ணீர்போலே பரார்த்தமாயாய்த்து இருப்பது. சேஷிக்கு அதிசயத்தைப் பண்ணியாய்த்து இவர்க்கு ஸ்வரூபஸித்தி.

ஈடு. (திருவாய்மொழி ப்ரவேசம்). [நசேத்யாதி]—உம்மை ஒழிந்தவன்று பிராட்டியுமில்லை, அடியேனுமில்லை. ஜீவித்தோமோ, முஹூர்த்தம். என்போலே என்றால்—ஜலாத் உத்த்ருதமான மத்ஸ்யம் நீர்நசை அறுமளவும் ஜீவிக்குமாப்போலே. நீர் நிறுத்திப் போகிறோமென்கிற வார்த்தை உம்முடைய திருவுள்ளத்திலே உண்டென்றறியுமளவும் காணும் நாங்கள் ஜீவிப்பதென்றாரிறே. அத்தலையில் நினைவாலே யிறே இத்தலை ஜீவிப்பது. 'எத்தேவர் வாலாட்டும் எவ்வாறு செய்கையுமப்போதொழியும்' என்கிறபடியே அவன் நினைவல்லாதவன்று இவையுமில்லையிறே.

३२. दानयज्ञविवाहेषु समाजेषु महत्सु च ।
न द्रक्ष्यामः पुनर्जातु धार्मिकं राममन्तरा ॥

தாநயஜ்ஞவிவாஹேஷு ஸமாஜேஷு மஹத்ஸு ச,
ந த்ரக்ஷ்யாம: புநர்ஜாது தார்மிகம் ராமமந்தரா. 5-13. 32

தானம் யாகம் விவாஹம் ஆகிய இவைகளிலும் பெரிய கூட்டங்களிலும் நடுவில் தர்மபுத்தியுள்ள ராமனை மறுபடியும் ஒருநாளும் காணப்போகிறோமல்லோம்.

ஈடு. (தி—வாய். 6-1-2) [தாநயஜ்ஞவிவாஹேஷு]—தானங்கள் பண்ணுமிடத்தே எழுந்தருளியிருப்பராயிற்று தேசத்திலே காலத்திலே ப்ராப்தவிஷயங்களிலே இடுவிக்கைக்காக. யாகங்களிலே எழுந்தருளியிருப்பராயிற்று, ந்யாயார்ஜிததநங்கொண்டு செய்விக்கைக்காகவும், சடங்குகளில் தப்பினவை உண்டாகில் அவை யெடுத்துக்கொடுக்கைக்காகவும். [விவாஹேஷு]—இரண்டு தலையையும் பொருந்தவிட்டு பொருந்தாதார்க்கு வேண்டுவன செய்து ஹோமம் பண்ணுவித்துத் தலைக் கட்டிக்கொடுக்கைக்காக, விவாஹம் பண்ணுமிடங்களிலெழுந்தருளி யிருப்பர். [ஸமாஜேஷு

மஹத்ஸு]—தீர்க்க ஸத்ரங்களிலேயாதல், உத்ஸவங்களிலேயாதல். [ச]—யாவனொருவன் ஓரிடத்தே அத்ருஷ்ட கார்யங்கள்செய்யும், அங்கேயிருப்பரென்கிறது. [நத்ரக்ஷ்யாமः புநர்ஜாது]—அவரை அவ்வோ இடங்களிலே இருக்கக்காண்கிறிலோம். [தார்மிகம் ராமமந்தரா]—ஏன்றுன் இவரிவ்விடங்களிலிருக்கிறதென்னில்—தர்மஸம்சயம் அறுத்துக் கொடுக்கைக்கும், அவை தப்பாமே அநுஷ்டிப்பிக்கைக்குமாக. இப்படியே யிறே அவன் படிகள்.

३३. मम त्वश्वा निवृत्तस्य न प्रावर्तन्त वर्त्मनि ।
उष्णमश्रु विमुञ्चन्तो रामे संप्रस्थिते वनम् ॥

மம த்வச்வா நிவ்ருத்தஸ்ய ந ப்ராவர்த்தந்த வர்த்மநி,
உஷ்ணமச்ரு விமுஞ்சந்தோ ராமே ஸம்ப்ரஸ்திதே வநம். 59-7. 33

ராமன் காட்டைக்குறித்து புறப்பட்டுப்போனபோது திரும்பின என்னுடைய வழியிலே குதிரைகள் செல்லவில்லை.

பெ. வ்யா. (நாச்சியார் 12-4) [மம]—அச்வஹ்ருதயம் அறிகைக்குத் தன்னைத் தான்மதித்தபடியாலே 'மம' என்கிறுன். [து]—இற்றைக்கு முன்பின்றிக்கே, இற்றைக்கு உள்ளதொரு விசேஷமாய்த்து இது. [அச்வாः]—என் கருத்தாலே நடந்து போனவை. [நிவ்ருத்தஸ்ய]—பெருமாளை எழுந்தருளிவித்துக்கொடுபோகிறபோது போய்த்தின. [நப்ராவர்த்தந்த வர்த்மநி]—வழிசெய்து கிடக்கிற பெருவழியை விட்டுக் காடுபோகத் தொடங்கிற்றின.

३४. गुहेन सार्धं तत्रैव स्थितोऽस्मि दिवसान् बहून् ।
आशया यदि मां रामः पुनः शब्दापयेदिति ॥

குஹேந ஸார்த்தம் தத்ரைவ ஸ்திதோஸ்மி திவஸாந் பஹூந்,
ஆசயா யதி மாம் ராமः புநச்சப்தாபயேதிதி. 59-7. 34

ராமன் என்னை மறுபடியும் கூப்பிட்டாலோ என்கிற ஆசையால் அங்கேயே குஹனோடுகூட வெகு நாள் வரையில் வசித்துக்கொண்டிருந்தேன்.

ஈடு. (தி—வாய். 8-8 ப்ரவேசம்) [குஹேநஸார்த்தமித்யாதி]—ஸ்ரீகுஹப்பெருமாளோடேகூட பெருமானைப் பிரிந்தவிடத்தினின்றும் கால் வாங்கமாட்டாதே நின்றுனயிற்று ஸுமந்த்ரன். அங்கு நின்றது ஒன்றிரண்டுநாளாயிருக்கச் செய்தே [பஹூந்] என்று நின்றதாயிற்று பிரிவாலே காலம் நெடுகினபடி. 'ஸ்ரீகுஹப்பெருமாளோடே நிற்க காலம் நெடுகுவானேன்' என்று பிள்ளைஉறங்காவில்லிதாஸரானைக் கேட்க 'ஸ்மாரகஸந்நிதியில் ஆற்றாமை இரட்டிக்குமிறே' என்றருளிச்செய்தாராம். 'மேகக்குழாங்கள்காள் காட்டேன்மின்னும் நும்முருவென் உயிர்க்கது காலன்' என்றாரிறே.

३५. विषये ते महाराज रामव्यसनकर्शिताः ।
अपि वृक्षाः परिम्लानाः सपुष्पाङ्कुरकोरकाः ।
उपतप्तोदका नद्यः पल्वलानि सरांसि च ।
परिशुष्कपलाशानि वनान्युपवनानि च ॥

விஷயே தே மஹாராஜ ராமவ்யஸநகர்சிதாः,
அபிவ்ருக்ஷாः பரிம்லாநாः ஸபுஷ்பாங்குரகோரகாः.
உபதப்தோதகா நத்யः பல்வலாநி ஸராம்ஸிச,
பரிசுஷ்கபலாசாநி வநாந்யுபவநாநி ச. 59-8,9. 35

ஓ மஹாராஜரே! உம்முடைய தேசத்தில் ராமனைப் பிரிந்த துக்கத்தால் இலைந் தலைகளான மரங்களும் பூ இளந்தளிர் மொட்டு ஆகிய இவைகளுடன் கூடி வாடி விட்டன. ஆறுகள் கொதிக்கின்ற ஜலமுடையவைகளாக (ஆயின.) சிறுகுட்டைகளும் பெரியகுளங்களும் (கொதிக்கின்ற நீருடையவைகளாய் ஆயின) காடுகளும் தோட்டங் களும் உலர்ந்த இலையுள்ளவைகளாக (ஆயின).

ஈடு. (தி—வாய். 2-1-1) [உபதப்தோதகா இத்யாதி]—ஆறுகளோடு சிறு குழிகளோடு பெருங்குழிகளோடு வாசியற கரையருகும் சென்று கிட்டவொண்ணாத படி ராம விரஹத்தாலே கொதிக்கிறது. [பரிசுஷ்கபலாசாநீத்யாதி]—சிறுகாட்டோடு பெருங்காட்டோடு வாசியற வெந்தாற்போலே கொளுத்திற்று.

ஈடு. (தி—வாய். ...) [உபதப்தோதகா நத்ய:]—'தாபார்த்தனுக்கு நீரிலே விழுந்தால் தாபம் ஆறும்' என்னுமிவ்வாஸனையைக்கொண்டு 'ராமவிச்லேஷத் துக்கும் இது பரிஹாரமோ' என்று ஜலத்திலே விழுவதாகக் கொண்டு செல்ல, கரை யிலுங்கூடக் கிட்டவரிதாயிருந்தது. 'சிலநீர்கள் தான் குளிரவற்றோ' என்று பார்த் தார்கள்; அவையுமப்படியேயாயிருந்தன. [பல்வலாநி ஸராம்ஸிச]—வ்ருக்ஷங்களோடு வஸிஷ்டாதிகளோடு வாசியற அழியுமாப்போலே.

ஈடு. (தி—வாய். 7-5-1) சேதநரெல்லாம் கண்ணநீர் விழவிட்டு நிற்கக் கழுத்து மட்டு நீரிலே நிற்கிற மரங்களிறே வாடிநின்றது—[அபிவ்ருக்ஷா: பரிம்லாநா: உபதப் தோதகா நத்ய:]—நீரோடு, அந்நீரில் விழுகிற ஆறோடு வாசியற்றபடி. உபதப்தமாகை யாவது—கரையருகும் கிட்ட வொண்ணாதபடியாயிருக்கை. [பல்வலாநி ஸராம்ஸிச] இதில், சிறுமை பெருமை என்றொரு வாசியில்லை, 'வநாந்யுபவநாநி ச' போலே.

३६. अतो नु किं दुःखतरं सोऽहमिक्ष्वाकुनन्दनम् ।
इमामवस्थामापन्नो नेह पश्यामि राघवम् ॥

அதோநு கிம் துஃக்கதரம் ஸோஹமிக்ஷ்வாகுநந்தநம்,
இமாமவஸ்த்தாமாபந்நோ நேஹ பச்யாமி ராகவம். 59-30. 36

இந்த தசையை அடைந்த அந்த நான் இக்ஷ்வாகுவம்சத்தில் பிறந்த ராமனை இங்கு காண்கிறேனில்லை. இதனைக்காட்டிலும் மிக்க துக்ககரமான விஷயம் (வேறு) ஏது?

ஈடு. (தி—வாய். 9-7-9) [இமாமவஸ்த்தாமித்யாதி]—ஆற்றாமை எல்லாம் சொல்லுவிக்குமிறே. "எனக்கு ஓராற்றாமைகள் உண்டானவளவில் கிட்டிநின்று முகங் காட்டி ஈரக்கையாலே தடவி நோக்குகைக்கன்றோ தம்மைப் பெற்றது. தம்மைப் பிரிந்து நோவுபடுகிற இற்றைக்கு மேற்பட ஆற்றாமை இல்லையிறே எனக்கு. இவ்வள வில் நான் பெருமானைக் காண்கிறிலேன்" என்றானிறே.

ஈடு. (தி—வாய். 6-7-6) [அதோநு கிமித்யாதி]—"நான் நெடுங்காலங்கூடி வருந்தித் தம்மைப் பெற்றது, தம்மைப் பிரிந்து நான் இவ்வவஸ்த்தையை ப்ராபித்த இற்றைக்கு அன்றோ. இன்று தம்மை நான் காணதொழிவதே" என்றானிறே.

३७. गजं वा वीक्ष्य सिंहं वा व्याघ्रं वा वनमाश्रिता ।
नाहारयति संत्रासं बाहू रामस्य संश्रिता ॥

கஜம்வா வீக்ஷ்ய ஸிம்ஹம்வா வ்யாக்ரம் வா வநமாச்ரிதா,
நாஹாரயதி ஸந்த்ராஸம் பாஹூ ராமஸ்ய ஸம்ச்ரிதா. 60-20. 37

காட்டை அடைந்தவளான (ஸீதை) ராமனுடைய கைகளைப் பற்றினவளாய் (இருப்பதால்) யானையோ சிங்கத்தையோ புலியையோ பார்த்தும் பயத்தை ஏற்றுக் கொள்வதில்லை.

ஈடு. (தி—வாய் 5-4-7) [கஜம்வேத்யாதி]—ஸ்வரூபப்ரயுக்தமான ஸ்த்ரீத்வம் பேரயிற்று. [பாஹூ ராமஸ்ய ஸம்ச்ரிதா]—பயஹேதுக்களுக்கு அஞ்சுவர்களோ. கண்ணயத்துக்குள்ளே யிருப்பார். ஆனைத்திரள்கள் ஸிம்மத்திரள்களளவல்லவிறே இது.

३८. तथाऽपि सूतेन सुयुक्तवादिना निवार्यमाणा सुतशोककर्शिता ।
न चैव देवी विरराम कूजितात्प्रियेति पुत्रेति च राघवेति च ॥

ததாபி ஸூதேந ஸுயுக்தவாதிநா நிவார்யமாணா ஸுதசோககர்சிதா,
ந சைவ தேவீ விரராம கூஜிதாத் ப்ரியேதி புத்ரேதி ச ராகவேதி ச. 38

பிள்ளையைப் பிரிந்த துக்கத்தால் வளர்ந்து இளைத்துப்போன கௌஸல்யா தேவியானவள் மிகவும் உசிதமாகப் பேசின ஸாரதியால் (ஸுமந்த்ரரால்) அவ்வாறு (சொல்லி) தடுக்கப்பட்டவளாயிருந்தபோதிலும் ஓ ப்ரியமானவனே என்றும் ஓ பிள்ளாயே என்றும் ஓ ரகுகுலத்தில் பிறந்தவனே என்றும் உள்ள கூவுதலில் நின்றும் ஒழிவடையவேயில்லை.

ஈடு. (தி—வாய். 4-7. ப்ரவேசம்) [ததாபி ஸூதேநேத்யாதி]—ஸ்ரீகௌஸல்யையார் பெருமாளைப் பிரிந்தவாற்றாமையாலே கூப்பிட, ஸ்ரீஸுமந்த்ரன் "அவரைப் பிரிந்தோம் என்று கூப்பிடவேண்டா காணும். தாமே வந்து புகுவர் காணும்" என்று ஆச்வாஸவசநம் பண்ணினான். [ஸூதேந]—சொன்னவார்த்தை 'ஆப்தம்' என்று கைக்கொள்ள வேண்டும்படி அந்தரங்கனானது. ஸாரதிகள் சொல்லுவதெல்லாம் ஆப்தமிறே. [ஸுயுக்தவாதிநா]—அதில்லையே யாகிலும் வார்த்தையைக் கேட்டால் 'இது அப்படியே' என்று விச்வஸித்து ஓடுகிற சோகம் தீரும்படி வார்த்தை சொல்ல வல்லவனாவது. [நிவார்யமாணா]—இவனாலே 'இது வேண்டா' என்று தடுக்கப்படாநிற்கச் செய்தேயும். [ஸுதசோககர்சிதா]—இப்படி இவன் இவளைப் பேரப் பேச நிற்கச் செய்தேயும் சொல்லுங்காட்டில் நிவ்ருத்தமாகாதிறே இவள் பிரிந்த விஷயத்தின் ஏற்றமை. நெடுநாள்கூடிப் பெற்ற பிள்ளையைப் பிரிந்தால் தரிக்கப் போகாதிறே. [நசைவ தேவீ விரராம கூஜிதாத்]—பிறர் கண்ணீரையுமாற்றி, இதுக்கு முன்பு சோகம் புதியதுண்டறியாதபோந்தவள், கூப்பிடுகிற கூப்பீட்டில்நின்றும் ஓவிற்றிலள். கூப்பிடுகிறபோது தானும் கேட்டார்க்கு அடைய இரக்கம் பிறக்கும்படி குயில் கூவினாப்போலே காணும் கூப்பிடுவது. கூப்பிட்ட பாசுரம்—[ப்ரியேதி புத்ரேதிச ராகவேதிச]—பிரிந்தால் துக்கப்படும்படி எனக்கு இனியவரே, உம்மைப் பிரிந்தாருடைய ஆற்றாமைக்கு நிர்வாஹகரானவரே, ஸர்வரக்ஷகர் குடியிலே பிறந்து பெற்ற தாயை நலியலாமோ? 38

३९. न ते मनुष्या देवास्ते ये चारुशुभकुण्डलम् ।
मुखं द्रक्ष्यन्ति रामस्य वर्षे पञ्चदशे पुनः ॥

ந தே மநுஷ்யா தேவாஸ்தே யே சாருசுபகுண்டலம்,
முகம் த்ரக்ஷ்யந்தி ராமஸ்ய வர்ஷே பஞ்சதசே புந:. 64-10. 39

எவர்கள் அழகிய மங்களமான குண்டலத்தையுடைய ராமனுடைய முகத்தை பதினைந்தாம் ஆண்டில் மறுபடியும் காணுவர்களோ; அவர்கள் மனிதர்கள் அல்லர்; அவர்கள் தேவர்கள்.

ஈடு. (தி-வாய். 9-8-9) [நதே மநுஷ்யா:] அவர்கள் செத்துப் பிறக்கிறவர்களுக்குக் கூட்டல்லர்கள். [தேவா:] அவர்கள் நித்யாநுபவம் பண்ணுகிறவர்களுக்குக் கூட்டாமித்தனை. [யேஇத்யாதி]—பதினாலாண்டும் ஒருபடி தப்பிக் கிடந்து அவர் மீண்டு வந்தால் அவ்வொப்பித்த முகத்தைக் காணப் பெறும் பாக்யாதிகர் ஆரோ? இங்கே காதாசித்காநுபவம் பண்ணுமவர்கள் நித்யானுபவம் பண்ணுமவர்களிலும் சீரியரே. 'விண்ணுளாரிலும் சீரியரே.' [வர்ஷே பஞ்சதசே புந:]—பதினாலாண்டும் கழித்துப் பதினைந்தாமாண்டைக்கு இருப்பாரிறே காணப்பெறுவார். காலம் முடிந்ததென் றிருக்கிறுனைய்த்து சக்ரவர்த்தி. ... ... ... 39

४०. स बाष्पकलया वाचा कलहंसस्वरो युवा। विललाप सभामध्ये जगर्हे च पुरोहितम् ॥
चरितब्रह्मचर्यस्य विद्यास्नातस्य धीमतः। धर्मे प्रयतमानस्य को राज्यं मद्विधो हरेत् ॥
राज्यं चाहं च रामस्य धर्मं वक्तुमिहार्हसि। कथं दशरथाज्जातो भवेद्राज्यापहारकः ॥

ஸ பாஷ்பகலயா வாசா கலஹம்ஸஸ்வரோ யுவா,
விலலாப ஸபாமத்யே ஜகர்ஹே ச புரோஹிதம்.
சரிதப்ரஹ்மசர்யஸ்ய வித்யாஸ்நாதஸ்ய தீமத:,
தர்மே ப்ரயதமாநஸ்ய கோ ராஜ்யம் மத்விதோ ஹரேத்.
ராஜ்யஞ்சாஹஞ்ச ராமஸ்ய தர்மம் வக்துமிஹார்ஹஸி,
கதம் தசரதாஜ்ஜாதோ பவேத் ராஜ்யாபஹாரக:. 82-10 12. 40

அன்னத்தின் தொனிபோன்ற குரலையுடைய யுவாவாகிய அந்த பரதன் கண்ணீரடைப்பினுல் ஸ்பஷ்டமல்லாத வாக்கினுல் ஸபைமத்தியில் கதறினன். புரோஹிதனை வஸிஷ்டனையும் குறைகூறினன். ப்ரஹ்மசர்யத்தை அநுஷ்டித்தவரும் (குருகுலவாஸம் செய்தவரும்) வித்யாப்யாஸம் முடிந்து ஸ்நாநம் செய்தவரும் புத்திமானும் தர்மாநுஷ்டாநத்தில் முயன்றுவருபவருமான (ராமனுடைய) ராஜ்யத்தை என்னைப் போலுள்ள எவன் அபஹரிப்பன்? ராஜ்யமும் நானும் ராமனுடைய ஸொத்து. இந்த விஷயத்தில் தர்மத்தை சொல்லக் கடவீர். தசரதரிடமிருந்து பிறந்தவன் ராஜ்யத்தை வழிப்பறி கொள்ளுபவனுக எப்படி ஆகக்கூடும்?

ஈடு. (தி—வாய். 2-9-1) கைகேயி 'ராஜந்' என்ற சொல் பொறுக்கமாட்டாமே திரளிலே வந்து கூப்பிட்டானிறே—[விலலாப ஸபாமத்யே]—ஒரு திரளாகவிருந்து என்னுடைய சேஷத்வத்தை அபஹரிப்பதே. 'தஸ்யுபிர்முஷிதேநேவ யுக்தமாக்ரந்திதும ப்ருசம்' என்னும்படி இழந்த வஸ்துவுக்குத் தக்கபடியாயிருக்குமிறே கூப்பீடும். [ஜகர்ஹேச]—ஸந்த்யாவந்தநத்துக்குப் பிற்பாடரை சிஷ்டகர்ஹைபண்ணுவாரைப் போலே கர்ஹித்தான். புரோஹிதம்—அழகியதாக இக்குடிக்கு முன்னோடி ஹிதம் பார்த்தாய். [ஸபாமத்யே புரோஹிதம் ஜகர்ஹே]—'நியமாதிக்ரமம் ரஹஸி போதயேத்' என்கிற நிலையும் பார்த்திலன். [ராஜ்யஞ்சாஹஞ்ச ராமஸ்ய]—ஒருவனுக்கு இரண்டு வஸ்து சேஷமானல் ஒன்றை ஒன்று நிர்வஹிக்குமோ? ஆனல் ராஜ்யம் தான் என்னை ஆண்டாலோ. [தர்மம் வக்துமிஹார்ஹஸி]—'பெருமாள் காடேறப் போனர்; சக்ரவர்த்தி துஞ்சினர்; நாடு அராஜகமாய்க் கிடக்கவொண்ணுது; நின்றாரில் ப்ரதாநர் தலையிலே முடிவைக்கவேணும்' என்று பார்த்தாயித்தனை போக்கி இதுக்கு விஷயபூதனை என்னைப் பார்த்து வார்த்தை சொல்லிற்றில்லை. [கதம் தசரதாத் ஜாதோ பவேத் ராஜ்யாபஹாரக:]—அவர் பொகட்டுப்போன ராஜ்யத்தை அபஹரித்து, அவரைப் பிரிந்தவநந்தரத்திலே முடிந்தவன் வயிற்றிலே பிறந்தேனும்படி எங்ஙனே நான்?

ஈடு. (தி—வாய். 6-7-3) சக்ரவர்த்திக்கு சாஸ்த்ரார்த்தங்கள் பண்ணினவன்று ஞாயிறுபாடு 'கைகேயி பண்ணின கச்மலத்துக்கு நாமும் கீழோலையிட்டோமென்று

நாட்டார் நினைத்திருப்பதொன்றுண்டு. அத்தோஷம் நமக்கில்லை என்று அறி விக்கவேணும்' என்று புக்கான். ராஜலோகமடங்கலும் திரண்டு 'கர்த்தாவானவனை இழந்தோம்; அநந்தரம் ப்ராப்தரானவர் காடேறப்போய்க்கொடுநின்றார். இனி ராஜ புத்ரர்களில் நின்றாரைக்கொண்டு நிர்வஹிக்குமத்தனையிறே' என்று பார்த்து, மங்களா வஹமான தூர்யகோஷங்களையும் பண்ணிக்கொண்டிருந்தார்கள். இத்த்வநி செவிப் பட்டபோது கருமாணிக்கமலையில் பிராட்டிஸ்வயம்வரத்துக்கு மணமுரசு அறைந்த போது தோழிபட்டதெல்லாம் பட்டான். [விலலாப ஸபாமத்யே]—தனியிடத்தி லன்றே பரிகொடுப்பது. தனக்கு சேஷத்வமிறே ஸ்வரூபம். ஸ்வரூபத்தையிறே அபஹரிக்க நினைக்கிறது. [ஜகர்ஹே ச]—ஸந்த்யாவந்தநத்துக்குப் பிற்பட்டாரை சிஷ்டகர்ஹை பண்ணுமாபோலே. [புரோஹிதம்]—இக்குடிக்கு நாங்கள் கைவாங்கி யிருக்க, நீ முன்னோடிக் காரியங்கள் நடத்தக்கடவதாகச் சமைந்தபடி சாலவழகியதா யிருந்தது. [ஸபாமத்யே ஜகர்ஹே]—'நியமாதிக்ரமம் ரஹஸி போதயேத்' என்ற நிலையைக் குலைத்தான், புரோஹிதத்வமாகிற ஹேது கழிகையினாலே. [ராஜ்யஞ்சா ஹஞ்ச ராமஸ்ய]—சேநவஸ்துக்களிலே ஒன்றை ஒன்று ஆளுமோ? அங்ஙனேயா மன்று ராஜ்யம் தான் எனக்குக் கடவதானலோ. [தர்மம் வக்து மிஹார்ஹஸி]— 'லோகத்திலே தமப்பன்மாரையும் தமையன்மாரையும் அழியச்செய்து தாந்தாம் ராஜ்யத்தைக் கைக்கொண்டு போருவதொன்றுண்டு; அது இந்த வ்யக்தியிலும் செய் யும்' என்றிராதே கொள்ளாய். என் ப்ரக்ருதி அறிந்து அநுகூலமாக வார்த்தை சொல்லப் பாராய். [கதம் தசரதாத் ஜாதோ பவேத் ராஜ்யாபஹாரக:]—அவர் பிரிந்த வநந்தரம் முடியவல்லவன் வயிற்றிலே பிறந்தேனும்படி எங்ஙனே அவர் பொகட்டுப் போன ராஜ்யத்தை நான் அபஹரித்தால்? ... ... ... 40

४१. कच्चिन्न दुष्टो व्रजसि रामस्याक्लिष्टकर्मणः ।

கச்சிந்ந துஷ்டோ வ்ரஜஸி ராமஸ்யாக்லிஷ்டகர்மண: 85-7. 41

மேன்மையுள்ள காரியங்களைச் செய்யாநின்ற ஸ்ரீராமனுடைய (விஷயத்தில்) (நீர்) கெட்ட எண்ணமில்லாதவராய் செல்கின்றீரோ? (என்று குஹன் பரதனோடு சொன்னான்.)

ஈடு. (5-7-1) தாய்வழிகொண்டே ஸ்வபாவங்கள் அறுதியிடலாமாகாதே. பெருமாளைக் கண்டல்லது தரிக்கமாட்டாதானாய் வருகிற ஸ்ரீபரதாழ்வானைக் கண்டு வைத்தேயும், த்ரிகாலஜ்ஞனான ரிஷியுங்கூட "கச்சிந்ந துஷ்டோ வ்ரஜஸி" என்று தாயாரையிட்டு வழக்குப் பேசுவித்துக்கொண்டு அவரைக் காடேறப் போகவிட்டா யாகில், இன்னம் 'பெருநாளிருக்கில் கிழ்வயிற்றில் கழலையாகிறது' என்று அங்குப் போய் நலியத் தேடுகிறாயல்லையிறே—என்றானிறே. அவன்படிகள் நாறுநிறகச் செய் தேயும் மாத்ருஸம்பந்தங்கொண்டு சங்கித்தவிறே. யதார்த்தஸ்வபாவங்களைக் கொண்டு பத்தும் பத்தும் நிமித்தங்களை அறியக்கடவராயிருப்பார்களாயிற்று வேடர்; இங்ஙனேயிருக்கச் செய்தேயும், தம்மெல்லையிலே இவன் வந்து புகுந்ததுக்கு ஹ்ருஷ்ட ராய் 'அடிச்சேரியிலே வந்து புகுவதே' என்பது; 'ஆனாலும் ராஜாக்களாயிருப்பார் வன்னியர் பற்றிலே புகுரும்போது கேள்விகொண்டன்றே புகுருவது' என்றாப்போலே யிருக்க வெளிறும் காழ்ப்புமாகச்சொல்லி, தாய்வழியை நினைத்து அசிர்த்தாரிறே ஸ்ரீகுஹப்பெருமாளும். ... .... ... ... 41

४२. आचचक्षेऽथ सद्भावं लक्ष्मणस्य महात्मनः ।

भरतायाप्रमेयाय गुहो गहनगोचरः ॥

ஆசசக்ஷேத ஸத்பாவம் லக்ஷ்மணஸ்ய மஹாத்மந:,

பரதாயாப்ரமேயாய குஹோ கஹநகோசர:. 86-1. 42

பிறகு காட்டையே விஷயமாகக்கொண்ட குஹன் அறிய முடியாத நிலைமையி லுள்ள பரதனின்பொருட்டு மஹாத்மாவான லக்ஷ்மணனுடைய நல்ல ஸ்வபாவத்தைச் சொன்னான்.

பே—வ்யா. (பெரியதிருமொழி. 8-2-5.) ஸ்ரீபரதாழ்வான் வாராநின்றானென்று ஸ்ரீகுஹப்பெருமாள் கேட்டவநந்தரம், இளையபெருமாள் செய்தத்தையெல்லாம் சொல்லத்தொடங்கினார். "வந்தபோது செய்யும்படி சொல்லுகிறதென், ஓடம் நின்றதே, [illegible], தானும் தன்பரிகரமும் அக்கரைப்படும்படி காண்கிறேன்" என்று [illegible]திருந்தான். அநந்தரம் ஸுமந்தரனுள்ளிட்டார வந்து இளையபெருமாள் ஸ்வபாவம்போலே காண் பரதாழ்வானுடைய ஸ்வபாவமிருப்பது. அவனை நீ காணவேணும் காண் என்ன, இவன் போய்க் கண்டவநந்தரம் 'இவருடைய ஸ்வபாவமிருந்தபடி என்' என்று ஆச்சர்யப்பட்டு இவருக்கு நம்மால் கொடுக்கலாம் உபஹாரமென்னென்று பார்த்து, இவருக்கு ஸத்ருசமான உபஹாரம் இளையபெருமாள் ஸ்வபாவங்களாமித்தனை என்று அவற்றைச்சொல்லத்தொடங்கினான் —[ஆசசக்ஷே ஸத்பாவம்]—ஸத்பாவமாகிறது—ஸத்துக்களுடைய ஆசாரம். 'ஸச்சப்தஸ்ஸாதுவாசகஃ. ஸாதவஃ க்ஷீணபாபாஃஸ்யுஃ' என்கிறபடியே ஸத்துக்களாவார் க்ஷீணதோஷரிறே. பாவம் ஆசாரம் ஒருவனை அர்த்தவான், அபிஜாதன், வித்வான் என்றறிவது அவர்கள் அநுஷ்டானங்கொண்டிறே. அப்படியேயிறே இவருடைய அநுஷ்டானமும். 'பெருமாள் கண்வளர்ந்தருளுகைக்குப் புல்கள் அறுப்பது, படுக்கை படுப்பது, தாமரையிலையைப் பறித்துத் தண்ணீரை முகந்து திருவடிகளை விளக்குவது. பின்னையும் தண்ணீரை முகந்து அமுதுசெய்யப் பண்ணுவது, சேஷித்தத்தை பிராட்டியை அமுதுசெய்யப் பண்ணுவது, கண்வளர்ந்தருளப்பண்ணி கையும் வில்லுமாய்க்கொண்டு நம்மையுங்கூட அசித்து நோக்குவதாய்க் காணும் 'அவருடைய ஆசாரமிருந்தபடி' என்று அவர் வருத்தாந்தத்தைச்சொல்லத்தொடங்கினான். [லக்ஷ்மணஸ்ய மஹாத்மநஃ]—கடலைக் கையாலே இறைக்கத் தொடங்கினான். [லக்ஷ்மணஸ்ய மஹாத்மநஃ ஸத்பாவம் அப்ரமேயாய பரதாய ஆசசக்ஷே]-கழியின் பெருமையைக் கடலுக்குச் சொல்லத்தொடங்கினான். [பரதாய அப்ரமேயாய ஆசசக்ஷே]—சேஷபூதனால் 'நான் பணிசெய்யக் கடவேன்' என்று சொல்லியோ பணிசெய்வது. அதுவிடக்க, 'அஹம் ஸர்வம் கரிஷ்யாமி' சொல்லிற்றெல்லாம் செய்யக் கடவேனென்று ப்ரதிஜ்ஞைபண்ணி '[illegible] இரீர்' என்ன, 'மாட்டேன் என்று பின்போகை சேஷத்வகருத்யமோ? [illegible] புகச்சொன்னாராகில் அத்தைச்செய்தல், அதில் நன்றும்படி ராஜ்யத்திலேயிருக்கச் சொன்னாராகில் அத்தைச் செய்தல், பின்போகச் சொன்னாராகில் அத்தைச் செய்தல் இப்படி சொல்லிற்றுச் செய்கையன்றோ சேஷத்வக்ருத்யம். [குஹஃ]—நெடுநாள் பரிசயித்த பரதனுக்கு ஒரு நாள் சீவித்த குஹன் சொல்லுமபடியாவதே. இன்னான் இன்னார்க்குச் சொல்லுகை என்றில்லையாகாதே கற்றவர்களாமித்தனையாகாதே வேண்டுவது. [கஹநகோசரஃ]—'காட்டில் மரத்திலும் மட்டையிலும் பழகிப்போந்த இவன் இளையபெருமாள்படிகளைப் பேசிப்போந்தபடி கண்டதே' என்று ரிஷி கொண்டாடுகிறான். அங்ஙனன்றிக்கே பெருமாளுடைய வ்யதிரேகத்தில் தூற்றிலே தலை மடுத்துக் கொண்டு கிடந்தவன், பரதனைக் கண்டவாறே புறப்பட்டானென்னுதல்.

ஈடு. (தி—வாய். 6-5. ப்ரவேசம்) பகவத்விஷயத்துக்கு 'பழையார், புதியார்' என்றில்லை. தேசிகர் சொல்ல ஆதரமுடையார் கேட்குமித்தனை. [ஆசசக்ஷே ஸத்பாவம் லக்ஷ்மணஸ்ய மஹாத்மநஃ] என்று இளைய பெருமாள்படியை ஸ்ரீபரதாழ்வானுக்கு ஸ்ரீகுஹப்பெருமாளிறே சொல்லுகிறார். [ஆசசக்ஷே]—வாகிந்த்ரியத்துக்கு நிலமல்லாததும் சொல்லலாமாகாதே. [அத]—ஸ்ரீபரதாழ்வான் ஸ்வபாவமறிந்த பின்பு [ஸத்பாவம்]—'பால்யாத் ப்ரப்ருதி ஸுஸ்நிக்தஃ' என்றும், 'பரவானஸ்மி' என்றும் ஸத்தையோடு வ்யாப்தமான ஸ்வபாவத்தைச் சொன்னான். [லக்ஷ்மணஸ்ய மஹாத்மநஃ]—கடலைக் கையாலே இறைக்கத்தொடங்கினான். [பரதாயாப்ரமேயாய]—

'இன்னாரின்னார்க்குபதேசிக்க' என்றில்லையாகாதே. [குஹோகஹநகோசர:] - காட்டில் மரங்களில் வாசியறியுமவர் இவர்கள் நிலை அறியும்படி நிலவரானார். அன்றிக்கே, ராம விரஹத்தாலே ஒரு தூற்றடியிலே கிடந்தவன், தேசிகரைப் பெற்றவாறே தலையெடுத்துப் புறப்பட்டானென்றுமாம். ... ... ... 42

४३. तदवस्थं तु भरतं शत्रुघ्नोऽनन्तरस्थितः ।
परिष्वज्य रुरोदोच्चैर्विसंज्ञः शोककर्शितः ॥

ததவஸ்த்தம் து பரதம் சத்ருக்நோநந்தரஸ்தித:,
பரிஷ்வஜ்ய ருரோதோச்சை: விஸம்ஜ்ஞ: சோககர்சித:. 87-5. 43

துக்கத்தால் இளைத்த சத்ருக்நன் அடுத்து நிற்கின்றவனாய், (இருந்து) அந்த ஸ்திதியிலுள்ள பரதனை அணைத்துக்கொண்டு ப்ரஜ்ஞையற்றவனாய் உரக்க அழுதான்.

பெ—வ்யா. (திருநெடுந்தாண்டகம் 12) ஸ்வாமி தரைப்பட்டுக்கிடந்து ப்ரலாபியாநிற்க சேஷபூதன் தரித்து நின்றானென்கை ஔர்த்தமன்றே. க்ருத்யாக்ருத்யவிவேகம் பண்ணமாட்டாமையாலே ஸ்தப்தனாய் நின்றானென்கை. இவனுடைய ப்ரலாபத்தைத் தவிர்க்கமாட்டான்: பெருமாளை அழைக்கமாட்டான்; ஆகையாலே ஸ்தப்தனாய் நின்றானென்கை. ... ... ... ... ... 43

४४. अद्य राजकुलस्यास्य त्वदधीनं हि जीवितम् ।
पुत्र व्याधिर्न ते कच्चिच्छरीरं परिबाधते ॥

அத்ய ராஜகுலஸ்யாஸ்ய த்வததீநம் ஹி ஜீவிதம்,
புத்ர வ்யாதிர்ந தே கச்சித் சரீரம் பரிபாததே. 87-9. 44

இன்று இந்த அரண்மனையிலுள்ளாருடைய உயிர் உன் வசமன்றோ பிள்ளாய்! உன்னுடைய சரீரத்தை ரோகம் பாதிக்கவில்லையே?

பெ—வ்யா. (திருவிருத்தம் 99) ரஸவாதம் கீழ்ப்போமாபோலே ஸ்ரீபரதாழ்வான் மோஹித்துக்கிடக்க திருத்தாய்மார் வந்து சொல்லுகிறார்கள்—'அப்படைவீடு ஆக உன்னைக் கொண்டன்றோ ஜீவிக்கவிருக்கிறது. சக்ரவர்த்தி துஞ்சினான், பெருமாள் பொகட்டுப்போனார். நீ இருந்தாயென்கிறார்களன்று; உன்முகத்தில் பையாப்புக்கண்டால் அவர் மீளுவரென்னுமத்தாலேயன்றோ இது ஜீவித்துக்கிடக்கிறது. நீ இல்லையென்று கேட்கில் இத்திக்கு என்றும் நோக்குவரோ? [புத்ர வ்யாதிர்ந தே கச்சித் சரீரம் பரிபாததே]—'அபிவ்ருக்ஷா:' என்கிறபடியே படைவீட்டில் ஸ்தாவரங்களகப்பட நோவொன்றாயிருக்கச் செய்தே 'பிள்ளாய், உனக்கு நோயென்' என்று கேட்கவேண்டும்படியிறே சடக்கென மோஹித்து விழுந்தபடி.

பெ—வ்யா. (நாச்சியார் திருமொழி 12-5) 'பெருமாள் காடேறப்போனார்; சக்ரவர்த்தி துஞ்சினான்; இனி நோக்குமித்தனையிறே எங்களை' என்கிறார்களவர். 'உன்முகத்தில் பயிர்ப்பைக் கண்டுபோனவர் உன்னை இழக்கமாட்டாமையாலே மீள்வர்' என்னுமிது பற்றாசாகவிறே நாங்கள் ஜீவித்திருக்கிறது. [புத்ர வ்யாதிர்ந தே கச்சித்]—நின்றாப்போலே நில்லா, ரஸவாதிகள் போமாபோலே மோஹித்துக்கொண்டு நிற்கக் கண்டார்கள். 'பிள்ளாய' உனக்கோடுகிற நோயென்? என்று கேட்கிறார்கள். ராமவிரஹம் ஸர்வஸாதாரணமாய்த்து; தங்களுக்குமுண்டாயிருக்க 'உனக்கோடுகிற தசை என? என்று கேட்கும்படியாய்த்து இவன் மோஹித்த சடக்கு. தங்களளவிலே யாகிலிறே இவனுக்கு மதுவே என்று நினைத்திருக்கலாவது. 'அபிவ்ருக்ஷா:' என்னுமா

போலே மரங்களும் வாடாநிற்க, இவனைக்கேட்கவேண்டாவிறே. ஒரு வ்யக்திகதமான விசேஷமுண்டானால் அந்த வ்யக்திதன்னையே கேட்டறியவேணுமிறே. ... 44

४५ वैदेहि रमसे कच्चित् चित्रकूटे मया सह ।
पश्यन्ती विविधान् भावान्मनोवाक्कायसंयता ॥

வைதேஹி! ரமஸே கச்சித் சித்ரகூடே மயாஸஹ,
பச்யந்தீ விவிதாந் பாவாந் மநோவாக்காயஸம்யதா. 94-18. 45

ஸீதாய் (நீ) மனம் வாய் மெய் ஆகிய த்ரிகரணங்களையும் ஒருப்படுத்தினவளாய் (இருந்துகொண்டு) சித்ரகூடத்தில் பலவிதமான பதார்த்தங்களை பார்க்கின்றவளாய் என்னோடு கூடி, களிக்கின்றாயா? ... ... ... 45

ஈடு. (2-6 ப்ரவேசம்) மைதிலி, உன்னை அறிந்தாயே, நம்மை அறிந்தாயே, கலக்கிற தேசமறிந்தாயே? என்றாரிறே பெருமாள்.

४६. तथोक्तो धर्मशीलेन भ्रात्रा तस्य हिते रतः ।
लक्ष्मणः प्रविवेशेव स्वानि गात्राणि लज्जया ॥

ததோக்தோ தர்மசீலேந ப்ராத்ரா தஸ்ய ஹிதே ரத:,
லக்ஷ்மண: ப்ரவிவேசேவ ஸ்வாநி காத்ராணி லஜ் ஜயா. 97-19. 46

அந்த ராமனுடைய ஹிதத்தில் ஈடுபட்ட லக்ஷ்மணன் தர்மஸ்வபாவமுள்ள ப்ராதாவான ராமனால் அப்படி சொல்லப்பட்டவனாய் வெட்கத்தால் தன்னுடையதுகளான அவயவங்களை புகுந்தனன்போலும் (வெட்கத்தால் ஒடுங்கி நின்றான்).

பெ—வ்யா. (நாச்சியார் 12-4) [ஸ்வாநி காத்ராணி லஜ்ஜயா]—ஒருவர்க்கொருவர் அம்பேற்றுப் பெறப்படுகிற ராஜ்யம், இவர்கள் கையிலே படுகிறபாடிறே இது. பரதனை 'கொல்லுவன், குத்துவன்' என்றுபட்டாலே இளையபெருமாள் முனிதல் இரச் சிலவாறே சொல்ல, பெருமாள் பல படிகளாலும் மாற்றிப் பார்த்தார். பின்னையும் மீண்டிலர். 'பாடமித்யேவ வக்ஷ்யதி' என்று 'அதுவோ பிள்ளைக்கு ராஜ்யச்ரத்தை ஓடுகிறது. 'பிள்ளாய், அத்தைத் தவிர் என்று நான் சொன்னவாறே தலைச்சுமையோபாதி பொகட்டுப்போகிறான்' என்றவாறே இளையபெருமாளைக் கண்டுவிட்டதில்லை. 46

४७. यावन्न चरणौ भ्रातुः पार्थिवव्यञ्जनान्वितौ ।
शिरसा धारयिष्यामि न मे शान्तिर्भविष्यति ॥

யாவந்ந சரணௌ ப்ராது: பார்த்திவவ்யஞ்ஜநாந்விதௌ,
சிரஸா தாரயிஷ்யாமி நமே சாந்திர் பவிஷ்யதி. 98-8. 47

(நான்) ராஜலக்ஷணம் பொருந்திய ப்ராதாவான ராமனுடைய திருவடிகளை தலையினால் எவ்வளவுக்குள் தாங்கமாட்டேனோ, (அவ்வளவுக்குள்) எனக்கு நிம்மதியானது உண்டாகமாட்டாது.

ஈடு. (தி—வாய் 2-9-1) [யாவந் நசரணௌவித்யாதி]—பிள்ளாய், உன் உள் வெதுப்பு ஆறுவதெப்போது? என்றார்கள். பெருமாளும் தமக்கு வகுத்த முடி சூடி, நானும் எனக்கு வகுத்த முடிசூடின அன்றென்றானிறே. ... ... 47

४८. सुभगश्चित्रकूटोऽसौ गिरिराजोपमो गिरिः ।
यस्मिन्वसति काकुत्स्थः कुबेर इव नन्दने ॥

ஸுபகச்சித்ரகூடோஸௌ கிரிராஜோபமோ கிரி:,
யஸ்மிந் வஸதி காகுத்ஸ்த: குபேர இவ நந்தநே. 98-12. 48

இமயமலைக்கு ஒப்பான இந்த சித்ரகூடமலையானது அழகியது; எந்தமலையில் ஸ்ரீராமன் பூங்காவில் குபேரனைப்போல வஸிக்கின்ருனே.

பெ—வ்யா. (பெரியதிருமடல் 7.) [ஸுபகச்சித்ரகூடோஸௌ கிரிராஜோபமோ கிரி:]—இந்த சித்ரகூடத்தினத்தனை வீறுடையாரில்லை. கண்ணுக்கழகாயிருக்கச் செய்தே, விருப்பமில்லாதன சில உண்டிறே, அங்ஙனல்லவிறே இதன்படி: திருமலைகளோடொக்கச் சேர்க்கலாம். [காகுத்ஸ்த: யஸ்மிந் வஸதி]—நல்லதுகண்டால் விடமாட்டாமல் விருப்பத்தைப்பண்ணியிருக்கிருர். [யதத்யாஸ்தே மஹாதேஜா: குபேர இவ நந்தநே]—துஷ்டஸத்வப்ரசுரமான இந்த ப்ரதேசத்திலே குபேரன் தன் பூந்தோட்டத்தை விடாதே வர்த்திக்குமாபோலே விடாதே வர்த்திக்கிருர். அப்படிப்பட்ட சித்ரகூடத்தோபாதி வீறுடையாரில்லை.

ஈடு. (தி—வாய். 3-3-7) [ஸுபக:]—வீறுடைத்தாயிருக்கை. [கிரிராஜோபம:]—திருமலையோடொத்திருக்கை. [யஸ்மிந் வஸதி]—அதுக்கு ஹேது சொல்லுகிறது. [காகுத்ஸ்த:]—போகத்துக்கு ஏகாந்தமான ஸ்தலம் தேடி அநுபவிக்கும் குடியிலே பிறந்தவர் விடாதே விரும்பி வர்த்தித்தாரென்பது யாதொன்றுண்டு. [குபேர இவநந்தநே]—துஷ்டஸத்வப்ரசுரமான தேசத்திலே செருக்கனை வைச்ரவணன் போதுபோக்கைக்காக தன்னுத்யானத்திலுலாவுமாபோலே ஸஞ்சரித்தார். 48

४९. जटिलं चीरवसनं प्राञ्जलिं पतितं भुवि ।
ददर्श रामो दुर्दर्शं युगान्ते भास्करं यथा ॥

ஜடிலம் சீரவஸநம் ப்ராஞ்ஜலிம் பதிதம் புவி,
ததர்ச ராமோ துர்தர்சம் யுகாந்தே பாஸ்கரம் யதா. 100-1. 49

சடையுள்ளவனும் மரவுரியை உடுத்துக்கொண்டிருப்பவனும் கைகூப்பியவனும் பூமியில் விழுந்தவனும் யுகமுடிவில் ஸூர்யனைப்போலே காணமுடியாமலிருப்பவனுமான (பரதனை) ராமன் பார்த்தான்.

ஈடு. (தி—வாய். 1-4-8) [ஜடிலம்]—நல்ல மாலை வந்தால் 'பிள்ளை பரதன் மயிருக்காயிருந்தது' என்ருயிற்று சக்ரவர்த்தி வாய்விடுவது; அவனுயிற்று சடை புனைந்திருக்கிருன். [சீரவஸநம்]—நல்ல பரிவட்டம் கண்டால் 'இது பிள்ளைக்கு ஆம்' என்று வாய்விடுவர்கள்; அவனன்ருே மரவுரி உடுத்திருக்கிருன். [ப்ராஞ்ஜலிம்]—அவர்கள் இரந்து கொடுக்கப்பெறுமவன், தன்னபிமதத்துக்குத் தானிரப்பாளனுயிருந்தான. [பதிதம் புவி]—'அங்கே பரதமாரோப்ய' என்னும் நிலை பெற்றதில்லை. 'படுக்கை உறுத்தும்' என்று மடியிலே கண்வளருமவனுயிற்று தரைக்கிடை கிடக்கிருன். [ததர்ச ராமோ துர்தர்சம்]—வைத்தகண் வாங்காதே கண்டுகொண்டிருக்கும் பெருமாளுக்கும் கண்வைக்கவொண்ணுதபடியிருக்கிறவனை. [யுகாந்தே பாஸ்கரம் யதா]—பெருமாளொருவர்க்கும் கண்வைக்கவொண்ணுமையன்றிக்கே, 'ஜகதுபஸம்ஹாரம் பிறக்கப்புகுகிறதோ' என்னும்படியாயிருந்தான. ... ... 49

५०. एभिश्च सचिवैः सार्धं शिरसा याचितो मया ।
भ्रातुः शिष्यस्य दासस्य प्रसादं कर्तुमर्हसि ॥

ஏபிச்ச ஸசிவைஸ்ஸார்த்தம் சிரஸா யாசிதோ மயா,
ப்ராதுச் சிஷ்யஸ்ய தாஸஸ்ய ப்ரஸாதம் கர்த்துமர்ஹஸி. 104-12. 50)

என்னால் இந்த மந்திரிகளோடுங்கூடி தலையால் (தேவரீர்) ப்ரார்த்திக்கப்படுகிறீர்; ஸஹோதரனும் சிஷ்யனும் தாஸனுமான (எனக்கு) கிருபையை செய்யக்கடவீர்.

ஈடு. (மஹாப்ரவேசம்) அவன் (பரதன்) திருச்சித்ரகூடத்திலே பெருமாள் எழுந்தருளியிருந்தாரென்று கேட்டு 'ஏபிச்ச ஸசிவைஸ்ஸார்த்தம' என்கிறபடியே என ஒருவன் கண்ணில் கண்ணீர் பொறுக்கமாட்டாதவர் இத்தனைபேராற்றாமை கண்டால் மீளாதொழிவரோ!. [சிரஸா யாசிதோ மயா]—என் அபிமதம் தம் தலையாலே இரந்து செய்யக்கடவர் நான் என் தலையாலே இரந்த கார்யத்தை மறுப்பரோ! [ப்ராதுঃ]—நான் தம் பின் பிறந்தவனல்லேனோ; [சிஷ்யஸ்ய]—பின் பிறந்தவனென்று கூறுகொள்ளவிருக்கிறேனோ; மந்த்ரஸம்பந்தமும் தம்மோடேயன்றோ. [தாஸஸ்ய]—சிஷ்யனாய் க்ரயவிக்ரயார்ஹனன்றிக்கே இருக்கிறேனோ. [ப்ரஸாதம் கர்த்து மர்ஹஸி]—ஆனபின்பு என்பக்கல் ப்ரஸாதத்தைப் பண்ணியருளாரோ! என்று மநோரதித்துக்கொண்டுபோகிற போதை தரிப்புப்போலே திருவாசிரியத்தில் நிலை.

ஈடு. (தி—வாய் 3-1-1.) ஸ்ரீ பரதாழ்வானை கைகேயி 'ராஜந்' என்ன, அப்போது அந்த ஸ்வாதந்த்ர்யம் பொறுக்கமாட்டாமே படுகுலைப்பட்டாற்போலே 'விலலாப' என்று கூப்பிட்டானிறே. பாரதந்த்ர்யரஸமறிவர்க்கு 'ஸ்வாதந்த்ர்யமநர்த்தம்' என்று தோற்றுமிறே. [ஏபிச்ச ஸசிவைஸ்ஸார்த்தம்]—தன்னிற் காட்டிலும் கணகுழிவுடையார் இத்தனைபேர் உண்டாயிற்று. தன்னோடொத்த ஆற்றாமையுடையாரனைகரைக் கூட்டிக்கொண்டு போந்தான். எனக்கன்றோ 'இவன் தம்பி' என்று ஸ்வாதந்த்ர்யம் பண்ணி அவர்க்குக் கண்ணழிக்கலாவது; இவர்கள் சொல்லிற்றுச் செய்ய வேணுமே. இவர்கள் தாங்களே கார்யத்தை விசாரித்து அறுதியிட்டு 'நீர் இப்படிச் செய்யும்' என்றவர்களேவினால் அப்படிச் செய்யவேண்டிவருமிறே அவர்க்கு. அவருடைய வ்யதிரேகத்தில் தனக்குண்டான ஆற்றாமையை அறிவிக்கப்போகிறானாகில் தனியே போயறிவிக்கவும் ஆமிறே; இவர்களையெல்லாம் திரட்டிக்கொண்டு போனதுக்குக் கருத்தென்னென்னில்—நம்மொருவர் முகத்துக் கண்ணீர் கண்டால் பொறுக்க மாட்டாதவர், தம்மைப் பிரிந்த பிரிவுபொறுக்கமாட்டாதேகண்ணுங்கண்ணீருமாயிருப்பாரித்தனைபேரைக்கண்டால் மீளாரோ வென்னும் கருத்தாலே. பூசலுக்குப் போவாரைப் போலே யானை குதிரை யகப்படக்கொண்டு போகிறானிறே அவற்றுக்கும் அவ்வாற்றாமையுண்டாகையாலே. [சிரஸா யாசித:]—என்பேற்றுக்குத் தாம் அபேக்ஷித்துத் தருமவர், நான் என்தலையாலே இரந்தால் மறுப்பரோ. [மயா]—அத்தலை இத்தலையானால் செய்யாதொழிவரோ. [ப்ராதுঃ]—'பஸ்மஸாத் குருதாம் சிகீ' என்னும்படி தம்பின் பிறந்தவனல்லேனோ நான். என் தம்பிமார்க்கு உதவாத என்னுடைமையை அக்நிக்கு விருந்திட்டேனென்றாரிறே—யத்விநா இத்யாதி. [சிஷ்யஸ்ய]—ப்ராதாவாகக் கூறுகொண்டு முடிசூடியிருக்குமவனோதான்; அசேஷரஹஸ்யமும் தம்மோடேயன்றோ அதிகரித்தது. [தாஸஸ்ய]—சிஷ்யனாய் க்ரயவிக்ரயார்ஹனன்றிக்கேயிருந்தேனோ. ஆனபின்பு நான் அபேக்ஷித்தகார்யத்தை மறுப்பரோ! இதிறே கைங்கர்யத்தில் சாபலமுடையாரிருக்கும்படி.

ஈடு: (தி—வாய். 9-2-2) [ஏபிச்ச ஸசிவைஸ்ஸார்த்தம்]—தானொருவனுமே போகவமைந்திருக்க, ஆர்த்தர் பலரையும் கொண்டுபோனான். அதுக்கடி—'நாமொரு

